"செந்தமிழ் வளர்க்கும் செட்டிநாடு' - பக் 85-90
காரைக்குடி கம்பன் கழக வெளியீடு - 2017

# சித்தாந்த வித்தகர்

## முரு. பழ. இரத்தினம் செட்டியார்

*டாக்டர் சுப.திண்ணப்பன், சிங்கப்பூர்*

தமிழகத்தில் செட்டிநாட்டினைச் சேர்ந்த விரையாச்சிலை என்னும் ஊரில், மாத்தூர் - மண்ணூர்ப்பிரிவில், முரு. பழநியப்ப செட்டியார் - நாகம்மைஆச்சி ஆகிய இருவரின் மகனாகப் பிறந்தவர் இரத்தினம்செட்டியார். தம் ஐயாவின் வழிகாட்டலின் மூலம் சிறுவயதிலேயே திருமுறைகளைப் பயின்றார். பின் இளமையிலேயே மலாயா சென்று அங்கு சீனியர் கேம்பிரிட்ஜ் வரை படித்தார். 1940 இல் தமிழகம் திரும்பிய பின்னர் மதுரைத் தமிழ்ச்சங்கத் தேர்வுக்குப் படித்து, இலக்கண-இலக்கிய அறிவுத் தேர்ச்சி பெற்றார். சைவசித்தாந்த நூல்களைப் பழுதறக் கற்று ஆழங்கால் பட்டவரானார். அரிய தத்துவக் கருத்துகளையும் எளிமையாக விளக்கும் ஆற்றல் பெற்றார். இவர் 1950 முதல் மலேசியாவிலும் தமிழகத்திலும் தனிச் சொற்பொழிவுகளும் தொடர் சொற்பொழிவுகளும் நிகழ்த்திச் சைவமும் தமிழும் செழிக்கச் செய்தார். சைவசித்தாந்த சமாஜம், சைவ ஆதீனங்கள், பல்கலைக் கழகங்கள், கம்பன் கழகங்கள் ஆகியவற்றின் சார்பாக நடந்த விழாக்களில் பேசியும், பட்டிமன்றங்களுக்குத் தலைமை வகித்தும் சிறந்த சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார். மேலும்இலக்கியம் ஆன்மீகம் தொடர்பான ஐயங்களைத் தீர்க்கும் ஆற்றல் பெற்றவர். இவர் எழுதியுள்ள நூல்கள் வருமாறு

(1) கடவுளால் முடியாத செயல்கள் (2) தடைகளும் விடைகளும் (3) வாலி வதம் சரியா? (4)புலால் தின்பது தீவினையா? (5) திருவாசகச் சுவை (6) இதோ சைவசித்தாந்தம் தெரிந்து கொள்ளுங்கள்.(7) கம்பன் உணர்த்தும் பரம்பொருள்.

இவர் பெற்றுள்ள பல விருதுளில் சில:

1959இல் குன்றக்குடி அடிகளார் வழங்கிய "அருள்நெறிச் செல்வர்", 1960இல் மலேசியத் தமிழ்ச்சங்கங்கள் இணைந்து வழங்கிய "புலவர்மணி", 1962இல் திரு.கா இராமநாதன் செட்டியார் வழங்கிய "சித்தாந்தவித்தகர்", 1970இல் இந்து பரிட்சத்தி சபை வழங்கிய வித்யாரத்னா , 1979இல் புதுக்கோட்டை தமிழ்ச்சங்கம் வழங்கி "செந்தமிழ்ச்செல்வர்".

1969ஆம் ஆண்டு தொடங்கி அவரின் நிறைவுவரைப் பழகிப் பயின்றிடும் வாய்ப்பு அடியேனுக்குக் கிடைத்தது. இரத்தினம்செட்டியார் கம்பராமாயணம் தொடர்பாகக் கொண்டிருந்த கருத்துகள் சிலவற்றைப் பகிர்ந்துகொள்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## இராமன் பரம்பொருள்

இத்தலைப்பில் இரத்தினம் செட்டியார் எழுதியுள்ள கட்டுரை ஒன்று, கம்பன்மலர் என்னும் பெயரில் அகில இலங்கைக் கம்பன் கழகத்தின் 20 ஆம் ஆண்டு(1980-2000) நினைவுமலரில் இடம் பெற்றுள்ளது. அதன் அடிக்குறிப்பில் "நன்றி- கம்பன்உணர்த்தும்பரம்பொருள்நிலை- சென்னைக் கம்பன்கழகம் என்ற செய்தியும் உள்ளது.

சிவனும், நான்முகனும், திருமாலும் இராமனின் உடம்பில் இடம் பெற்றிருப்பதை இயம்பும், 'ஏறாளும் இறையோனும், திசைமுகனும் திருமகளும் கூறாளும் தனியுடம்பன்' என்னும் நம்மாழ்வார் பாடல் தொடரை எடுத்துக்காட்டித் திருமாலின் பரநிலையைப் பேசுகிறார் செட்டியார். இதன் அடிப்படையில்,

மூலமும் நடுவும் ஈறும் இல்லது ஓர் மும்மைத்துஆய,<br>
காலமும் கணக்கும் நீத்த காரணன் கைவில்ஏந்தி,<br>
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து, தொல்லை<br>
ஆலமும்மலரும் வெள்ளிப்பொருப்பும் விட்டுஅயோத்தி வந்தான்(5884)

எனவரும் பாடலில் கம்பன் இராமனின் பரம்பொருள் நிலையைச் சுட்டுகிறான் என அவர் வலியுறுத்துகிறார். இப்பாட்டினைப் "பரம்பொருள் பாட்டு" என்றே அவர் அழைக்கிறார். காலமும் கணக்கும் நீத்த காரணன், சூலம், (சிவன்), திகிரிசங்கு(திருமால்), கரகம் (பிரமன்) துறந்துவந்தான் என வருதலின், மூவர்க்கும் முதலான பரம்பொருள் என்றே இராமனைக் கொள்ள வேண்டியநிலை ஏற்படுகிறது.

மேலும் சுக்கிரீவன் கூற்றாகக் கலன் காண்படலத்தில் இடம் பெறும்,

முளரிமேல் வைகுவான், முருகன் தந்தஅத்,<br>
தளரியல் பாகத்தான், தடைஇகை ஆழியான்,<br>
அளவிஒன்று ஆவரேஅன்றி - ஐயம்இல்<br>
கிளவியாய்! தனித்தனி கிடைப்பரோ துணை? (3917)

பாடலிலும் பிரம்மா, சிவன், திருமால் மூவரின் சேர்க்கை என இராமனைக் கருதவேண்டிய நிலை காணக்கிடைக்கிறது என்கிறார் இரத்தினம் செட்டியார். இல்லையேல் மூலப்பரம்பொருள் எனக் கம்பன் சொல்லும் திருமால் சிவனும் பிரம்மனும் இல்லாவிட்டால் வலிமையற்றவர் ஆகிவிடுவார் என்னும் விபரீதப்பொருள் கொள்ளவேண்டியது வரும் எனக் கூறிப் பரநிலை(மூலப்பரம்பொருள் நிலை)என்றும், வியூக நிலை (அணிவகுப்பு/அவதாரநிலை) என்றும் பிரித்துப் பொருள் கொண்டால்தான் அவன் பாடியுள்ள பாடல்கள் அனைத்தும் ஒன்றுக்கொன்று முரணாகாமல், தெளிவாகப் பொருள் தரும் எனக் கட்டுரையை முடிக்கிறார். முடிக்கும்

சமயத்தில், வைணவ அன்பர் ஒருவர் எழுப்பிய மூன்று கேள்விகளுக்கு விடையும் அளித்துள்ளார் செட்டியார்.

திருமால் உடம்பில் சிவனும் பிரம்மனும் தென்பட்டால், அவர்கள் தேவியர் எங்குறைவார் என்பது முதற்கேள்வி. அந்தந்த மூர்த்திகளின் தேவிமார் அந்தந்த மூர்த்திகளில் ஒடுக்கம்தானே என்றும் அந்நிலையில் திருமாலின் உடம்பில் தங்குவர் என்பதும் செட்டியார் அவர்களின் பதில். "என் மலைமகள் கூறன் என்கோ" என நம்மாழ்வார் திருமாலை அழைப்பதை மேற்கோள் காட்டியுள்ளார். முளரி மேல் வைகுவான் பாடலில், திருமால் இராமனுக்கு ஈடாகமாட்டார் என்பது, இராமன் மீது கொண்ட ஈடுபாட்டைக் காட்டுவதுதானே என்பது இரண்டாவதுகேள்வி. பாட்டில் மூவரும், - திருமால், பிரமன், சிவன்- சேர்ந்து என்று வந்துள்ளது எண்ணத்தக்கது எனப் பதில் கூறுகிறார். பாத்திரங்கள் பேசுவதை வைத்துக் கம்பன் கருத்து இதுதான் எனக் கூறலாமா என்பது மூன்றாவதுவினா. கம்பன் வைணவனாக இருப்பதால் அப்பாத்திரங்கள் கூறும் வைணவக் கருத்துகளை, அவன் கருத்துகளாகவே கொள்ள வேண்டி இருக்கிறது என்பது செட்டியாரின் பதில். இந்த ஆய்வுக்கட்டுரை வைணவ சித்தாந்தம் கூறும் பரம், வியூகம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமித்துவம் என்னும் ஐந்து இறைநிலைகளோடு ஒத்துப் போவதையும் காணமுடிகிறது.

## பிறர் நெஞ்சு புகாக் கற்பினள் சீதை

பெண்மைக்குரிய நெறியாகக் கற்பினைக் கருதுவது தமிழர் தம் தலையாய கொள்கையாகும். "உயிரினும் சிறந்தன்று நாணே, நாணினும் செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" எனத் தொல்லோர் கிளவி (சூ -1059) எனத் தொல்காப்பியம் கற்பின் சிறப்பை முன்னையோர் காட்டியநெறி என மொழிகிறது. திருவள்ளுவரும், "பெண்ணிற் பெருந்தக்க யாவுள, கற்பெனும் திண்மை உண்டாகப் பெறின்?"(குறள் 54) எனக் கற்பின் பெருமை பேசுகிறார். இடைப்பட்ட சங்க இலக்கியங்களும், வான் தரு கற்பு பற்றி மிகுதியாகப் பேசக் காணலாம். பின்வந்த சிலப்பதிகாரமோ, கற்பின் உருவகமாகத் திகழும் கண்ணகி பற்றிய காவியம் ஆகும். மணிமேகலை கற்புப் பற்றிப் பேசும்போது, "மண்டினி ஞாலத்து மழைவளம் தரூஉம், பெண்டிர் ஆயின் பிறர் நெஞ்சுபுகார்" (சிறைசெய்காதை) எனக் கூறுகிறது. 'பெய் எனப் பெய்யும் மழை' என நிற்கும் கற்புடைப் பெண்களாயின், அவர் மற்றொரு ஆடவர் மனதில் புகாத்தன்மைப் பெருங்கற்பிற்கு அடையாளம். இதற்கு ஏற்பக் கம்பன் கண்ட சீதை பிறர் நெஞ்சு புகாப் பெருங்கற்புடையவளாகத் திகழ்ந்தாளா? இராவணன் இதயம் புகுந்த சீதைக்கு இந்த இலக்கணம் பொருந்துமா? என்னும் வினாக்களுக்கு விடையளிக்கும் விதமாக இரத்தினம் செட்டியாரின் இனியபேச்சு ஒன்று சிங்கப்பூரில் அடியேன் தலைமையில் நிகழ்ந்தது. 1984 இல் சிங்கப்பூர்

பெருமாள் கோயிலில் கம்பன்விழா ஒன்று நிகழ்ந்தபோது, அந்நிகழ்ச்சி நடந்தது. "கற்புடைய பெண்டிரும் பிறர் நெஞ்சு புகாமையும்" என்னும் தலைப்பிட்ட கட்டுரையாகவும், பிறகு இது வெளிவந்தது. கம்பன் காவியப்படி, சூர்ப்பணகைதான் சீதையை இராவணனுக்கு முதன் முதலில் அறிமுகப்படுத்துகிறாள். சூர்ப்பணகை சூழ்ச்சிப்படலம் கூறும் பாடல்கள்வழி இதற்கு விரிவான விளக்கம் காணலாம். மார்பும் மூக்கும் இலக்குவனால் வெட்டுண்டநிலையில், இராவணனிடம் முறையிடவந்த சூர்ப்பணகையிடம் இராவணன், "நீஇடை இழைத்த குற்றம் என்னசொல், நின்னை இன்னே வாயிடை இதழும் மூக்கும் வலிந்து அவர் கொய்ய" என்று கேட்கிறான். அதற்குச் சூர்ப்பணகை, 'யாவர்க்கும் எழுதவொண்ணா இராமனோடும் தாமரை தவிரப்போந்தாள், பொருட்டினால் புகுந்ததுதான் என்வயின் குற்றம்' என உரைக்கிறாள். உடனே இராவணன், ''ஆர்அவள்?'' எனக் கேட்டதும் , "ஐய! ஆழித்தேர்அல்குல், கொங்கை செம்பொன் செய்குலிசச் செப்பு, பார் அவள் பாதம்தீண்டப் பாக்கியம் படைத்தது அம்மா! பேர்அவள்சீதை" என்று வடிவு எலாம் பேசலுற்றாள்' *(3134)*. சூர்ப்பணகை. தொடக்கத்திலேயே இராவணன் உள்ளத்தில் காம உணர்வைத் தூண்டும் வகையில் பேசுவதையும் காண்கிறோம். சீதை எனப் பேர் கூறி அறிமுகப்படுத்துவதையும், அவள் பிறன்மனைவி என்பதைக் கூறுவதையும் இப்பாடல்வழி உணர்கிறோம். சீதையின் வடிவழகைச் சூர்ப்பணகை வர்ணித்துச் சொல்லும்பாங்கு, இதயத்தில் காமஉணர்வை எழுப்பவல்லதாக உள்ளது. ''மஞ்சு ஒக்கும் அளகஓதி, மழை ஒக்கும் வடித்த கூந்தல்; பஞ்சுஒக்கும் அடிகள்; செய்ய பவளத்தின் விரல்கள், ஐய!'' *(3136)* எனச் சொல்லி, "தோளையே சொல்லுகேனோ? சுடர் முகத்து உலவுகின்ற, வாளையே சொல்லுகேனோ? அல்லவை வழுத்துகேனோ? மீளவும் திகைப்பதல்லால், தனித்தனி விளம்பல்ஆற்றேன்; நாளையே காண்டி அன்றே! நான் உனக்கு உரைப்பது என்னோ?" *(3139)* எனப் பலபடப் பாராட்டிப் பேசியபின், சீதையை உன்னிடம் சேர்ப்பதற்காக, எடுக்கலுற்ற என்னை இலக்குவன் வாளால் மூக்கு அரிந்துவிட்டான் எனக் கூறுகிறாள் சூர்ப்பணகை. இந்தநிலையிலேயே இராவணன், காமவெறியனாகி, கரனையும் மறந்தான்; தங்கை மூக்கினைக் கடிந்த இலக்குவன், பற்றி உற்ற பழியையும் மறந்தான்; கேட்ட மங்கையை மட்டும் மறக்காமல் மனத்தில் இருத்தினான். ''சிற்றிடைச்சீதை என்னும் நாமமும், சிந்தைதானும், உற்று இரண்டு ஒன்றுஆய் நின்றான், ஒன்று ஒழிந்து ஒன்றை உன்ன மற்றொரு மனமும் உண்டோ? மறக்கல் ஆம்வழி மற்றுயாதோ?'' *( 3150)* எனவும், "மயிலுடைச்சாயலாளை, வஞ்சியா முன்னம், நீண்ட எயிலுடை இலங்கைநாதன், இதயமாம் சிறையில்வைத்தான்; வெயிலுடைநாளில் உற்ற வெண்ணெய்போல வெதும்பிற்றுஅன்றே" *(3151)* எனவும் வரும் கம்பன் கூற்றான கவிதைகள் மூலம், இராவணன் சூர்ப்பணகை வர்ணித்த

சீதையைத் தான் தன் நெஞ்சத்திரையில் ஓவியமாகத் தீட்டி வைத்துக் காம நோயால் துன்புற்றானே ஒழிய, உண்மைச் சீதையை அவன் இன்னும் பார்க்கவே இல்லை என்பதைப் படிப்போர் உணர்வர். அதற்கு முன்னரே, சூர்ப்பணகை வர்ணித்த சீதைதான் இராவணன் நெஞ்சத்தில் ஓவியமாக நிலைத்து நின்றாள் என்பதைப் "பொன்மயம் ஆன நங்கை மனம் புகப் புன்மை பூண்ட தன்மையோ?" *(3153)*என்னும் கம்பன் கேட்கும் வினாவும் நிலைநாட்டும். எனவே சீதை, பிறர் நெஞ்சு புகாக் கற்பினள்தான் என்பது இரத்தினம் செட்டியார் வாதமாகும். இவ்வாறு, சீதையின் கற்பின் சிறப்பைத் தமிழ்க்கண்ணோட்டத்தினின்று தவறவிடாது காத்து நின்ற கம்பன் மாட்சிமையைச் செட்டியார் அப்பேச்சில் தெளிவுபடுத்தினார்.

**வாலிவதம் சரியா?**

இத்தலைப்பில், இரத்தினம் செட்டியார் எழுதிய 92 பக்கநூல் ஒன்று, புதுக்கோட்டை மீனாட்சி பதிப்பகத்தாரால் 1975இல் வெளியிடப் பட்டது. அவ்வெளியீட்டு விழாவில் கம்பன்அடிப்பொடி சா.கணேசன் அவர்கள் கலந்துகொண்டு பாராட்டினார். 'வாலிவதம் சரியே' என்பது நூலாசிரியரின் முடிபு. அதற்கேற்ப வாதங்களை அடுக்கடுக்காகச் சான்று களுடன் தந்துள்ளார். 'இராமன் வாலியை மறைந்திருந்து கொன்றது ஏன்?' என்பதே வாலிவதையில் எழுப்பப்படும் முக்கிய வினா. இதற்குச் சமாதானம் சொல்லும் பல விடைகளில் ஒன்று வாலியை யார் எதிர்த்தாலும் அவரின் பலத்தில் பாதிப்பங்கு வாலிக்குப் போய்ச்சேரும் என்பது. இதற்குச் சான்றாக, அனுமன் வாலியின் சிறப்புகளைக் கூறும் பாடல்களில் ஒன்றான, "கிட்டுவார் பொரக்கிடைக்கின் அன்னவர், பட்ட நல்வலம் பாகம் எய்துவான்" *(3825)*என்னும் பாடலைச் சுட்டிக் காட்டுவர். இதற்கு இரத்தினம் செட்டியார் தந்த விளக்கம் பல அறிஞர் களின் பாராட்டினைப் பெற்றது. இங்கே "கிட்டுவார்" என்பது வாலி யுடன் "மற்போர்" செய்வாரைக் குறிக்குமே அன்றி, எட்டி இருந்து "விற்போர்" செய்வாரைக் குறிக்காது. விற்போர் செய்வரிடத்தும் வாலி பாதிப் பலம் பெற வேண்டுமானால், அந்தஎதிராளி மீது பாய்ந்து, வாலி அவரைக் கட்டிப்பிடித்து, தன் பிடிக்குள் அகப்படுத்தல் வேண்டும் என்பது இதனால் பெறப்படும் என்பது செட்டியார் தந்த விளக்கம் ஆகும்.

"சீதையைச் சிறை பிடித்த இராவணனுக்குத் தூது அனுப்பிய இராமன், இங்கு வாலிக்கும் தூது அனுப்பிப் பேசியபின் கொல்லும் முயற்சியில் இறங்கி இருக்கலாமே என்பதும் மற்றொருவினா. இதற்குச் செட்டியார் தரும் விடை வருமாறு: இராவணன் சீதையைச் சிறை வைத்திருந்தாலும், களங்கப்படுத்தாமல் வைத்திருந்தான். அதனால், இராமன் அங்கதனைத் தூது அனுப்பினான். வாலியோ உருமையைக் களங்கப்படுத்திவிட்டதால் இந்தச் சமாதான முயற்சிக்கு அறவே இடமில்லாமல் போகிறது.

வாலிக்கும் சரணாகதி அளித்திருக்கலாமே என்பது அடுத்தகேள்வி. பிறர்மனை நயந்த குற்றத்திற்குரிய தண்டனையை அளிக்காமல், சரணாகதி அளிப்பது, அவன் ஈடேற்றத்தைக் கெடுக்கும் என்பது இராமன் கருத்து அதனால் வாலியை அழைத்துப் பேச விரும்பவில்லை.

மறைந்து நின்று கொன்று வில்லறம் துறப்பதா? அல்லது பிறன்மனை நயந்தவனைத் தண்டிப்பது முக்கியமா? என எண்ணிப் பார்க்கவேண்டும். முதலாவது வில்லறம் ஓர் அறம்தான். இரண்டாவதும் (பிறன் மனை நயந்தவனைக் கோறல்) ஓர் அறம் தான். இந்த இரண்டு அறங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது முதலாவது சிற்றறம், மற்றது பேரறம். இவை இரண்டனுள் பேரறத்தைக் காப்பாற்றுவதே முதன்மையானது எனக் கருதிச் சிற்றறம் துறந்த செம்மல்தான் இராமன். ஒரு பெண் கருவுயிர்க்கும் சூழ்நிலையில் எதிர்பாராத இடர் ஒன்று தோன்றியநிலையில், தாயைக் காப்பாற்றுவதா? சேயைக் காப்பாற்றுவதா எனக் கேட்கும்நிலையில், எல்லோரும் தாயைக்காப்பாற்றுங்கள் என்றுதானே சொல்வார்கள்! இங்கே தாய் போன்றது பிறர்மனை நயத்தலைத் தண்டிப்பது; சேய் போன்றது வில்லறம் துறப்பது." - இவ்வாறு விளக்குகிறார் இரத்தினம் செட்டியார். வாலியிடத்து நடந்த போரில்,தான் வில்லறம்துறந்ததையே, "போரில் வில்லறம் துறந்து வாழ்வார்க்கு" என இராமன் சுக்கிரீவனிடம் சொல்கிறான். அதற்காக இராமன் நோன்பு நோற்கிறான். போரில் அறவழியை மீறியது சரியே என எண்ணினாலும், அது தீமைதான் எனக் கருதியே நோன்பு மேற்கொள்கிறான் இராமன்.

மறைந்து நின்று கொன்றதற்குக் கம்பன் இலக்குவன் வாய்மொழியாக அளிக்கும் விடையை- செருவில் நீயும் அன்பினை உயிருக்கு ஆகி" அடைக்கலம் யான் என்பது கருதி அண்ணல் மறைந்து நின்று எய்தது என்றான் - என்பதை ஏற்றுக்கொண்டு, வாலிவதம் சரியே" என்கிறார் நூலாசிரியர். இவ்வாறு இராமயணத்தில், "இராமன் பரம்பொருளா", "சீதை பிறர்நெஞ்சுபுகாக் கற்பினளா", "வாலிவதம் சரியா?" எனத் தொன்று தொட்டு எழும்பும் வினாக்களுக்கு ஏற்றவகையில் விடைஅளிக்கும் வகையில் தம் எழுத்தாலும் பேச்சாலும் கருத்துகளை, சிந்தனைகளைத் தந்து சிறந்தவர் சித்தாந்த வித்தகர் முரு. பழ. இரத்தினம்செட்டியார்.